# ஆனந்தக் களிப்பு

சங்கர சங்கர சம்பு-சிவ, சங்கர சங்கர சங்கர சம்பு

ஆதி அநாதியும் ஆகி-எனக்கு
ஆனந்த மாய்அறி வாய் நின்று இலங்கும்
ஜோதி மவுனியாய்த் தோன்றி-அவன்
சொல்லாத வார்த்தையைச் சொன்னாண்டி தோழி
— சங்கர 1

சொன்னசொல் ஏதுஎன்று சொல்வேன்-என்னைச்
சூதாய்த் தனிக்கவே சும்மா இருத்தி
முன்னிலை ஏதும்இல் லாதே-சுகம்
முற்றச்செய் தேஎனைப் பற்றிக்கொண் டாண்டி
— சங்கர 2

பற்றிய பற்றுஅற உள்ளே-தன்னைப்
பற்றச்சொன் னான்பற்றிப் பார்த்த இடத்தே
பெற்றதை ஏதுஎன்று சொல்வேன்-சற்றும்
பேசாத காரியம் பேசினான் தோழி
— சங்கர 3

பேசா இடும்பைகள் பேசிச்-சுத்தப்
பேய்அங்கம் ஆகிப் பிதற்றித் திரிந்தேன்
ஆசா பிசாசைத் துரத்தி-ஐயன்
அடியிணைக் கீழே அடக்கிக்கொண் டாண்டி
— சங்கர 4

அடக்கிப் புலனைப் பிரித்தே-அவன்
ஆகிய மேனியில் அன்பை வளர்த்தேன்
மடக்கிக்கொண் டான்என்னைத் தன்னுள்-சற்றும்
வாய்பேசா வண்ணம் மரபும்செய் தாண்டி
— சங்கர 5

மரபைக் கெடுத்தனன் கெட்டேன்-இத்தை
வாய்விட்டுச் சொல்லிடின் வாழ்வுஎனக்கு இல்லை
கரவு புருஷனும் அல்லன்-என்னைக்
காக்கும் தலைமைக் கடவுள்காண் மின்னே
— சங்கர 6



கடலின் மடைவிண்டது என்ன-இரு
கண்களும் ஆனந்தக் கண்ணீர் சொரிய
உடலும் புளகிதம் ஆக-எனது
உள்ளம் உருக உபாயம்செய் தாண்டி
— சங்கர 7

உள்ளதும் இல்லது மாய்முன்-உற்ற
உணர்வது வாய்உன் உளம்கண்டது எல்லாம்
தள்ளனச் சொல்லிஎன் ஐயன்-என்னைத்
தான்ஆக்கிக் கொண்ட சமர்த்தைப்பார் தோழி
— சங்கர 8

பார்ஆதி பூதம்நீ அல்லை-உன்னிப்
பார்இந் திரியம் கரணம்நீ அல்லை
ஆராய் உணர்வுநீ என்றான்-ஐயன்
அன்பாய் உரைத்தசொல் ஆனந்தம் தோழி
— சங்கர 9

அன்பருக்கு அன்புஆன மெய்யன்-ஐயன்
ஆனந்த மோனன் அருள்குரு நாதன்
தன்பாதம் சென்னியில் வைத்தான் என்னைத்
தான்அறிந் தேன்மனம் தான்இறந் தேனே
— சங்கர 10

இறப்பும் பிறப்பும் பொருந்த-எனக்கு
எவ்வணம் வந்ததுஎன்று எண்ணியான் பார்க்கில்
மறப்பும் நினைப்புமாய் நின்ற-வஞ்ச
மாயா மனத்தால் வளர்ந்தது தோழி
— சங்கர 11

மனதேகல் லால்எனக்கு அன்றோ-தெய்வ
மவுன குருஆகி வந்துகை காட்டி
எனதுஆம் பணிஅற மாற்றி-அவன்
இன்னருள் வெள்ளத்து இருத்திவைத் தாண்டி
— சங்கர 12

அருளால் எவையும்பார் என்றான்-அத்தை
அறியாதே சுட்டிஎன் அறிவாலே பார்த்தேன்
இருள்ஆன பொருள்கண்டது அல்லால் கண்ட
என்னையும் கண்டிலன் என்னேடி தோழி
— சங்கர 13

என்னையும் தன்னையும் வேறா-உள்ளத்து
எண்ணாத வண்ணம் இரண்டுஅற நிற்கச்
சொன்னது மோஒரு சொல்லே-அந்தச்
சொல்லால் விளைந்த சுகத்தைஎன் சொல்வேன்
— சங்கர 14

விளையும் சிவானந்த பூமி-அந்த
வெட்ட வெளி நண்ணித் துஷ்ட இருள்ஆம்
களையைக் களைந்துபின் பார்த்தேன்-ஐயன்
களைஅன்றி வேறுஒன்றும் கண்டிலன் தோழி
— சங்கர 15

கண்டார் நகைப்புஉயிர் வாழ்க்கை-இரு
கண்காண நீங்கவும் கண்டோம் துயில்தான்
கொண்டார்போல் போனாலும் போகும்-இதில்
குணம்ஏது நலம்ஏது கூறாய்நீ தோழி
— சங்கர 16

நலம்ஏதும் அறியாத என்னைச்-சுத்த
நாதாந்த மோனம்ஆம் நாட்டம்தம் தேசம்
சலம்ஏதும் இல்லாமல் எல்லாம்-வல்லான்
தாளால்என் தலைமீது தாக்கினான் தோழி
— சங்கர 17

தாக்கும்நல் ஆனந்த ஜோதி-அணு
தன்னில் சிறிய எனைத்தன் அருளால்
போக்கு வரவுஅற்று இருக்கும்-சுத்த
பூரணம் ஆக்கினான் புதுமைகாண் மின்னே
— சங்கர 18



ஆக்கி அளித்துத் துடைக்கும் தொழில்
அத்தனை வைத்தும்எள் அத்தனை யேனும்
தாக்குஅற நிற்கும் சமர்த்தன்-உள்ள
சாக்ஷியைச் சிந்திக்கத் தக்கது தோழி
— சங்கர 19

சிந்தை பிறந்ததும் ஆங்கே-அந்தச்
சிந்தை இறந்து தெளிந்ததுங் ஆங்கே
எந்த நிலைகளும் ஆங்கே-கண்ட
யான்தான் இரண்டுஅற்று இருந்ததும் ஆங்கே
— சங்கர 20

ஆங்குஎன்றும் ஈங்குஎன்றும் உண்டோ-சச்சி
தானந்த ஜோதி அகண்ட வடிவாய்
ஓங்கி நிறைந்தது கண்டால் பின்னர்
ஒன்றுஎன்று இரண்டுஎன்று உரைத்திடல் ஆமோ
— சங்கர 21

என்றும் அழியும்இக் காயம்-இத்தை
ஏதுக்கு மெய்என்று இருந்தீர் உலகீர்
ஒன்றும் அறியாத நீரோ-யமன்
ஓலைவந் தால்சொல்ல உத்தரம் உண்டோ
— சங்கர 22

உண்டோ நமைப்போல வஞ்சர்-மலம்
ஊறித் ததும்பும் உடலைமெய் என்று
கொண்டோ பிழைப்பதுஇங்கு ஐயோ-அருள்
கோலத்தை மெய்என்று கொள்ளவேண் டாவோ
— சங்கர 23

வேண்டா விருப்பும் வெறுப்பும் அந்த
வில்லங்கத் தாலே விளையும் ஜனனம்
ஆண்டான் உரைத்த படியே-சற்றும்
அசையாது இருந்துகொள் அறிவுஆகி நெஞ்சே
— சங்கர 24

அறிவாரும் இல்லையோ ஐயோ-என்னை
யார்என்று அறியாத அங்கதே சத்தில்
வறிதே காமத்தீவில் சிக்கி-உள்ள
வான்பொருள் தோற்கவோ வந்தேன்நான் தோழி
— சங்கர 25

வந்த வரவை மறந்து-மிக்க
மாதர்பொன் பூமி மயக்கத்தில் ஆழும்
இந்தம யக்கை அறுக்க-எனக்கு
எந்தை மெய்ஞ்ஞான எழில்வாள் கொடுத்தான்
— சங்கர 26

வாள்ஆரும் கண்ணியர் மோகம்-யம
வாதைக் கனலை வளர்க்கும்மெய் என்றே
வேளான் அவனும்மெய் விட்டான்-என்னில்
மிக்கோர் துறக்கை விதிஅன்றோ தோழி
— சங்கர 27

விதிக்கும் பிரபஞ்சம் எல்லாம்-சுத்த
வெயில் மஞ்சள்என்னவே வேதாக மங்கள்
மதிக்கும் அதனை மதியார் அவர்
மார்க்கம்துன் மார்க்கம்சன் மார்க்கமோ மானே
— சங்கர 28

துன்மார்க்க மாதர் மயக்கம்-மனத்
துயர்க்குப் பற்றாது சொன்னேன் ஜனகன்
தன்மார்க்க நீதிதிஷ் டாந்தம்-அவன்
தான்அந்தம் ஆன சதானந்தன் அன்றோ
— சங்கர 29

அன்றுஎன்றும் ஆம்என்றும் உண்டோ-எனக்கு
ஆனந்தம் வேண்டின் அறிவுஆகிச் சற்றே
நின்றால் தெரியும் எனவே-மறை
நீதிஎம் ஆதி நிகழ்த்தினான் தோழி. 30

சங்கர சங்கர சம்பு-சிவ, சங்கர சங்கர சங்கர சம்பு.

திருச்சிற்றம்பலம்
ஓம் தத் ஸத்